# மலேயா தனவைசிய மகாநாட்டின்

## முதற்கூட்டம், ஈப்போ.

வரவேற்புக் கழகத் தலைவர்,

ஸ்ரீமாந், சா. லெ. ராம. செ. செட்டியப்பசெட்டியாரவர்களின்

# வரவேற்புப் பிரசங்கம்.

இரக்தாக்ஷிஹூ வைகாசிமீ ௨௨ (௧௫—௫—௨௪)

அன்பு கெழுமிய சகோதரர்களே!

பெரியோர்களே!!

பிரதிநிதிகளே!!!

மலேயா தனவைசியர் மகாநாட்டின் வரவேற்புக் கழகத்தாருக்காக வரவேற்புக் கூட்டத் தலைவனென்ற முறையில் உங்கள் எல்லோருக்கும் எனது மனமார்ந்தவந்தனத்தை அளித்து, நல்வரவு கூறுகிறேன். வரவேற்புக் கழகத்தின் தலைமையை வகிக்கப் போதிய ஆற்றல் எனக்கில்லாவிட்டாலும், நீங்கள் என்னிடம்கொண்டுள்ள அன்புமேலீட்டால் எனக் களித்ததை மறுத்தற் கஞ்சி ஏற்றுக்கொண்டேன். மேலும், முதன்முதலாகக் கூடும் இம் மகாநாட்டிற்கு என்னை வரவேற்புக் கழகத் தலைவனாக நியமித்ததை எனது பாக்கியமென்றே கருதுகிறேன். உங்களுடைய ஒத்துழைப்பினால் இம் மகாநாடு இனிது நடைபெறுமாறு எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகின்றேன்.

இத்தேசமானது வெகுகாலந்தொடர்ந்தே நம் தமிழர்களால் வாசஞ் செய்யப்பெற்றுவருகிறது. மலைகள் மிகுதியாக விருத்தலின் "மலேயா" தேசமென்ற பெயர்விளங்கலாயிற்று. தமிழர்களுக்குப்பிறகே இப்போது இந்நாட்டுக் குடிகளென்றுகருதப்படும் மாலாய்க்காரர்கள் குடியேறினர். நம் தமிழர்கள் இங்கு குடியேறு முன்னர் இந்நாடானது மலைங்காடாககவே இருந்தது. இவர்கள் குடியேறிய பிறகு ஆங்கிலேயர்களும் வந்து சேர்ந்தார்கள். அதன் பின்னரே இந்நாடு சீர்திருத்தம் பெற்றது. முக்கியமாக நம்மவர் வந்திராவிட்டால் இப்போது காணப்படும் மாளிகைகள், ரஸ்தாக்கள் ஒன்றுமே தோன்றி இருக்கமாட்டா. இம்மலாய் நாடு பல ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் "ஐக்கிய மலாய்நாடுகள்" என்ற நான்கு சுதேச ராஜ்யங்களுமே மிகச் செழுமை பெற்றிருக்கின்றன. இச் சுதேச ராஜ்யங்களில் ஒன்றான 'பேரா' இராஜ்யத்தில் முதன் முதலாக இம்மகாநாடு கூடுகிறது.

இப் பேரா ராஜ்யம் இம் மலாய்நாட்டின் மத்திய பாகத்திலிருக்கிறது. இங்கு வானுறவோங்கி வளர்ந்த மலைகளும் தேசமெங்கும் பரந்து செழுப்புறச்செய்யும் பல நதிகளும், கதிரவன் கிரணங்களும் உட்செல்ல முடியாது அடர்ந்த வனங்களும், என்றென்றும் வற்றாது அமுதெனப் பாயும் பல மலையருவிகளும் மலிந்திருக்கின்றன. இந்நாட்டில் இயற்கைவனப்பொடு செயற்கை வனப்பும் சேர்ந் தொளிர்கின்றது. நாடு முழுதும் ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அழகிய ரஸ்தாக்கள் செல்லுகின்றன. இருப்புப்பாதை இந்நாட்டின் முக்கிய பட்டணங்களிற் பலவற்றைப் பிணைக்கின்றது. எங்கும் அழகிய மாடமாளிகைகள் நிறைந்தபட்டணங்கள் மலிந்து கிடக்கின்றன. தேசமெங்கும் பண் செய்யப்பட்டுப் பலவித காய்கனி மலர்களோடு கூடிய பூங்காவனங்களும் நெற்பயிர் செய்யும் நன்செய் நிலங்களும் நிரம்பியிருக்கின்றன. ஏராளமான ஈயச் சுரங்கங்களும் பொற்சுரங்கங்களும் இந்நாட்டின் பல் பாகங்களிலும் காணப்படுகின்றன. ரப்பர்விலை இறக்கத்தால் மற்றைய நாடுகள் அடைந்த கஷ்டம் இந்நாட்டிற்கு மிக இல்லையென்றே சொல்லலாம். இவ்விதச் சிறப்பு வாய்ந்த இப்பேரா ராஜ்யத்தில் மிகப் பெரிய நகரமாகிய இந்த ஈப்போவில் இம் மகாநாடு கூடுவதானது குறிப்பிடத் தக்கதாகும். மேலும் நமது குல் தெய்வமாக விளங்கும் ஸ்ரீ தெண்டபாணியின் விசாக உத்ஸவ காலத்திற் கூடும் மகாநாடு இன்னும் விசேஷமென்றே சொல்லவேண்டும்.

வியாபார விஷயமாக இந்நாட்டிற்கு வந்திருக்கும் நம்மவர்கள் வருடந்தோறும் இம்மகாநாட்டைத் தவறாமற் கூட்டி நடத்தவேண்டுவது மிக அவசியமென்பதை உங்கட்கு நான் சொல்லவேண்டுவதில்லை. எந்தக் காரியமும் தனியாகச் செய்வதைக் காட்டிலும் பொதுவாகச் சேர்ந்து செய்தால் வெற்றிபெறலாமென்பது நிச்சயம். இதனை நன்குணர்ந்து இம் மகாநாட்டிற்கு ஏராளமான பிரதிநிதிகள் வந்திருப்பதைக் காண சந்தோஷமடைகிறேன்.

முக்கியமான இம்மகாநாட்டிற்கு, ஸ்ரீமாந் நீ. சோ. முத்தையா செட்டியாரவர்கள் தலைமைவகிக்க இசைந்துள்ளார்கள். இவர்களைப்பற்றி உங்கட்கு அதிகமாக நான் ஒன்றுஞ் சொல்ல வேண்டுவதில்லை; இவர்கள் வியாபாரத்தில் அதிகப் பிரியமுடையவர்கள்; நமது சீர்திருத்தத்தில் மிக ஆர்வங் கொண்டவர்கள்; மிகத் தைரியமாக எந்தக் காரியங்களையுஞ் செய்யும் ஆற்றலுடையவர்கள்; இத்தகைய ஒருவர் நமது மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க இசைந்தது நமது பாக்கியமேயாகும்.

இம்மகாநாட்டில் நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய பல விஷயங்களிருக்கின்றன. அவைகள் யாவும் உங்கள் முன்னால் கொண்வோப்பெற்று நிறைவேற்றப்படும். அவைகளை நீங்கள் நிறைவேற்றுவதோடு அனுஷ்டானத்திலும் கொண்டுவரல் வேண்டும். இங்கிருந்து திரும்பியவுடன் ஒவ்வொருவரும் இம்மகாநாட்டின் லக்ஷி

# மலேயா தனவைசியர் மகாநாட்டின்

## முதற்கூட்டம், ஈப்போ.

## பினங்கு, ஸ்ரீமாந், தீ. செ. முத்தைய்ச் செட்டியாரவர்களின்

# அக்கிராசனமுகவுரைப் பிரசங்கம்.

இரக்தாக்ஷி௵ வைகாசி௴ சூஉ (கக—ரு—உச)

அன்பு கெழுமிய பெரியோர்களே!
சகோதரர்களே!

இந்நிலவுலகில் எல்லா வுயிர்கட்கும் இன்பத்தையே ஈந்து கொண்டிருக்கும் இயற்கை வடிவினனான நம் முருகப்பிரான் திருவருளால், நீல நிறக்கடல் சூழ, எங்கு பார்த்தாலும் மனதைக் கவரும் பச்சை வர்ணம் வாய்ந்த மலைகள் அழகு செய்து நிற்க, கானகத்தூடேயும் கமுகு கதலி தென்னை தாமரை முதலியன வளர்ந்து இனிமை தந்து கொண்டிருக்க,கவிவாணர்களின்மனத்துக்கண் எழுந்து ததும்பி ஓடும் எண்ணங்கள் போன்று, ஆங்காங்கே கான்யாறுகள் பாய்ந்து பரந்து செல்லும் அற்புதக்காட்சி ஒருபால் அமைய, அறிவாளர்கள் கண்டு களிக்குமாறு ஒவ்வொரு கணமும் பல்வேறு சாயல்கள் கொண்டிலங்கும் வானம், சமீபத்திலிருக்கிறதோ வென்று ஐயுறத்தக்க அத்தனை அடுக்குகளையுடைய மாளிகைகள் மலிந்திருப்ப, அதையடுத்துள்ள சாலைகளின் பக்கத்தே தரையிலும் மேட்டிலும் புற்றரைகள் இரத்தினக் கம்பளமே விரித்திருக்கிறதென்று சொல்லும்படியான அவ்வளவு அழகு பொருந்தி யிருக்க, இன்னும் செயற்கைப் பொருள்கள் பல மல்கிக்கிடக்கும் இம்மலாய் நாட்டில் நம்மவர் நன்மை கருதுவான் வேண்டிக் கண்ட இம்மகாநாடு வளமலி, ஈப்போவில் வள்ளிமணாளன் திருநாளையடுத்த திங்களாகிய இன்று கூடுகிறது.

இம்மகாநாட்டிற்கு என்னைத் தலைமை வகித்து நடத்துமாறு தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள். அறிவிலும் ஆற்றலிலும் சிறந்த பலரிருக்கும் போது என்னைத் தெரிந்தெடுத்ததை நோக்கினால், தாங்கள்என்னிடம்வைத்த அன்பையே காட்டுகிறது. தாங்கள் தந்த பணியை மறுக்க இயலாது இப்பொறுப்பை ஏற்று நடத்துகிறேன். குற்றம் குறைகள் நிகழுமேல் க்ஷமித்து குணமான விஷயங்களைக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

நம்முன்னோர்கள் இவ்வுலகத்தில் எவ்விதக் கஷ்டமுமின்றி சௌகர்யமாக வாழ்க்கையை இனிது நடத்திவந்திருக்கிறார்கள். அவர்கள் உண்மையாகவும், உறுதியாகவும், ஒற்றுமையாகவும் இருந்திருக்கிறார்கள். ஒருவர்க்கொருவர் விவகாரம் நேர்ந்தால், நம்மவரிடையிலேயே பஞ்சாயத்து வைத்துத் தீர்த்துக் கொண்டு மனஸ்தாபமில்லாதிருந்திருக்கிறார்கள். ஏழையென்றும் பணக்காரனென்றும் வித்தியாசமில்லாது ஒருவர்க்கொருவர் உதவியாக இருந்திருக்கிறார்கள். சமூகப் பொது விஷயங்களில் ஒருவர்க்கொருவர் பிணங்கி நில்லாது முன் யோசனையாகவும் திடமாகவும் நடந்துகொண்டிருக்கிறார்கள். வரவறிந்துவீண்செலவுசெய்யாது செட்டாக வாழ்ந்திருக்கிறார்கள். உலகில் வாழவேண்டியதற்கு என்னென்ன சாதனங்கள் வேண்டுமோ அவ்வளவிலும் அவர்கள் பெருமைபெற்றிருந்ததை நீங்கள் கேள்விப்படவில்லையா? மன்னர்களும் போற்ற கெம்பீர வாழ்க்கை வாழ்ந்ததை நீங்கள் நினைத்துப் பாருங்கள். இப்பொழுது நாமுற்றிருக்கும் நிலையையும் சிறிது உன்னுங்கள். அப்பொழுது உங்கள் மனதில் ஓர் புதிய உணர்ச்சி பிறக்கும்.

உலக முழுதும் வெகு வேகமாக முன்னேற்ற மடைந்து வருகிறது. ஒவ்வொரு ஜாதிக்காரரும் தங்குறைகளை நீக்க முனைந்து நிற்கிறார்கள். சிலகாலமாக இவ்வுணர்ச்சி சிறுகவாவது நம்மிடையிலும் தோன்றி யிருப்பதற்கு ஆண்டவனை வழுத்துவோம். நமக்கு கஷ்டமும் சிரமமும் தந்து கொண்டிருப்பவைகளை நீக்க ஒவ்வொருவரும் கங்கணங் கட்டி வேலை செய்ய வேண்டும். சிறப்பாக இந்நாட்டிலுள்ள குறைகளைச் சீர்ப்படுத்தவே இம்மகாநாடு கூட்டப் பெற்றிருக்கிறதென்றறிகிறேன். பிறரிடமிருந்து நாம் ஒரு விஷயத்தில் சௌகர்யம் பெற வேண்டுமானால், அதைப்பற்றி முதலில் நன்குகச் சிந்திக்க வேண்டும். பிறகு அதிற்றலையிடவேண்டும். ஒருவர் இருவர் செய்வது போதாது. ஒரு கூட்டத்தாராகச் சேர்ந்து செய்வது சாலச் சிறந்ததாகும். முன்பின் நிகழும்விஷயங்களை யோசித்துத் தலையிட்ட பின்னர், என்ன காரணத்தை யொட்டியும் தயங்கி ஓய்ந்து விடாது சந்தர்ப்பம் கருதி உழைக்க வேண்டும். துன்பம் தந்துகொண்டிருக்கிறதென்று சொல்லிக்கொண்டே யிருந்தால் அத்துன்பம் நீங்கிவிடுமோ? அதை நீக்கக் காலமிடமறிந்து செய்கையிற் காட்டி உழைத்தால் நிச்சயமாகப் பலன் உண்டாகும்.

இத்தகைக் காரியங்களைத் துவக்குவதற்கு நம்முள் கூட்டுறவு அவசியம் வேண்டியதிருக்கிறது. ஒற்றுமையாயிருக்கவேண்டுமென்று ஒவ்வொருவருந்தான் எண்ணிக்கொள்ளுகிறோம். ஆனால், எங்கே எல்லோரும் ஒத்து வரப் போகிறார்களென்ற பேச்சும் நம் காதில் விழாமலில்லை. ஒற்றுமையினால் விளையும் நலனை மனதில் உண்மையாக வைத்து அறிவோமானால், எந்தக் காரியத்தைத்தான் நம்மால் சாதிக்க முடியாது? ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பித்திருக்கும்போது அதில் கர்வம் பாராட்டாது பொறுத்துச் சகித்து நிர்வகித்து நடத்தவேண்டும். வேறு விஷயங்களில் அபிப்பிராய பேதங்களிருப்பினும் குறிப்பிட்ட ஒன்றில்



யங்களை நிறைவேற்ற முயலுதல்வேண்டும். இங்கு நாம் முக்கியமாக யோசிக்கவேண்டிய விஷயங்களை மகாநாட்டின் தலைவரவர்கள் தெரிவிப்பார்களாயினும், எனது நோக்கத்திற் சில சொல்ல விரும்புகின்றேன்.

முக்கியமாகநம்மவர்கள் எல்லோரையும் பாதித்துக்கொண்டிருக்கும் ரப்பர் விஷயத்தைக் கேட்க நீங்கள் ஆவல் கொள்ளுவீர்களென்று நம்புகிறேன். ஆதியில் இந்நாட்டில் எங்கும் காப்பித் தோட்டங்களே நிறைந்திருந்தன. ஆனால், காப்பியால் அதிக ஊதியங் கிடைப்பதை யறிந்த அயல்நாட்டவரும் அதனையே பயிர் செய்ததால், சில வருடங்களில் காப்பிப் பயிரால் ஒருவித பிரயோசனமு மில்லாது போய்விட்டது. பின்னர், காப்பித் தோட்டக்காரர்கள் ரப்பரைப் பயிர் செய்யலாயினர். சில ஆண்டுகளுக்கு ரப்பர் அதிக ஊதியத்தைக் கொடுத்தது. அது கண்ட பலரும் ஆயிரக்கணக்கான ஏக்கர்களில் மலங்காடுகளைக் களைந்து ரப்பரைப் பயிர் செய்தனர். சொற்ப வருடங்களுக்குள் ரப்பரும் காப்பியைப் போல் தேவைக்கு மிகுதியாக உண்டாகி விட்டது. ஆயினும், ஐரோப்பிய மகாயுத்த காலத்தில், யுத்த தளவாடங்களுக்கு வேண்டியிருந்த காரணத்தால், ரப்பரின் விலை இறங்கிவிடவில்லை. ஐரோப்பிய யுத்தம் பெயரளவில் முடிவு பெற்றதும், மேல் நாடுகள் யாவும் தங்கள் பொருளாதார நிலையை இழந்து தவிக்கலாயின. அக்காரணத்தால் ரப்பரும் வேண்டுவோரின்றி விலை குறைய வாரம்பித்தது. நாட்செல்லச்செல்ல, சேகரிக்கச் செய்யும் செலவினும் மிகக் குறைந்த விலைக்கு ரப்பரை விற்கவேண்டியதாயிற்று. இம்மலாய்நாடு முழுதும் இந்த ரப்பர் ஒன்றையே தங்கள் தாய்ச்சரக்காகக் கொண்டிருந்ததலால், அரசாங்கத்தார் இந்நிலையைச் சீர்படுத்த முயன்றனர். ரப்பர் உற்பத்தியைக் குறைத்து அதன் விலையை உயர்த்த எண்ணினர். அதற்காக ரப்பர் உற்பத்தி செய்வோருக்கு அவரவர்களின் பயிரளவிற்கேற்க (கூப்பன்) அனுமதிச் சீட்டளித்து, கட்டுப்பாடு செய்தனர். மனிதன்செய்யும் செயல்கள் யாவற்றினும் குற்றம் நிகழ்வது இயல்பேபோல இக்கூப்பன் கொடுப்பதிலும் சில குறைகள் ஏற்பட்டு விட்டன. அவைகளை நீங்கள் நன்கு யோஜித்து அரசாங்கத்தாருக்கு அறிவித்து நீக்க முயலுவீர்களென்று நம்புகிறேன்.

இந்நாட்டில் உற்பத்தியாகும் ரப்பர் முழுதும் அயல்நாடுகளுக்கே ஏற்றப்படுகின்றது. ஆயிரக் கணக்கான மைல்களுக்குக் கடல்யாத்திரைசெய்து அங்கு சேர்ந்ததும், அது உபயோகத்துக்கு வேண்டிய பல பொருள்களாகச் சமைக்கப் பெற்று திரும்பவும் இங்கனுப்பப் பெறுகிறது. நாம் அப்பொருள்களை ஆவலோடு மிக்க விலை கொடுத்து வாங்குகின்றோம். அப்பொருள்களை ஏன் உற்பத்தியாகும் இந்நாட்டிலேயே செய்தல் படாது? ரப்பரை அயல்நாடுகளுக்கு அனுப்பிச் சாமான் செய்வதால் உண்டாகும் நஷ்டத்தைக் கொஞ்சங் கவனியுங்கள். இங்கிருந்து ரப்பரை யனுப்ப ஏற்படுஞ் செலவு எவ்வளவு? கடல் வரி எவ்வளவு? மேல்நாட்டு முதலாளிகளின் ஊதியம் எவ்வளவு? திரும்ப அனுப்பப் பெறுஞ் சாமான்களின் வழிச்செல வெவ்வளவு? அரசாங்கவரி எவ்வளவு? இந்நாட்டிலேயே ரப்பரைப் பண்படுத்திப் பொருள்களாக்கினால் இவ்வளவும் ஆதாயமாகி விடுமல்லவா? ஆனால் பலர் இந்நாட்டில் ரப்பரைப் பொருள்களாகச் செய்தல் அசாத்திய மென்கின்றனர். முயற்சித்தால் எக்காரியமும் அசாத்திய மல்லவென்பதை இங்கு நான் வற்புறுத்துகிறேன். மேலும் இப்பொழுதோ இந்நாட்டிற் பல ரப்பர்க் கம்பெனிகள் தோன்றி வேலை செய்கின்றன. ஆயினும்அவை மிகச் சிறியனவாக விருக்கின்றன. அவைகளை முன்னுக்குக் கொண்டுவர இந்நாட்டு முதலாளிகள் முந்துதல் வேண்டும். கூட்டுறவுக் கம்பெனிகள் பல காணவேண்டும். ரப்பர்ப் பொருளை மிகுதியாகச்சமைத்து சொற்பவிலைக்கு உலகெங்கும் பரப்புதல் வேண்டும். அப்படிச் செய்தால் நல்ல ஊதியம் அடைவதோடு ரப்பரின் தேவையும் அதிகரிக்குமென்று நான் திண்ணமாகச் சொல்லுவேன்.

இனி நம்மவர்கள் இந்நாட்டில் பல பெரிய நகரங்களில் ரொக்கத் தொழில் செய்கின்றனர். அவர்களுக்குக் கொடுக்கல் வாங்கல்களுக்குச்சௌகரியமாக விருப்பதற்கு ஒரு பாங்க் கணக்கு வேண்டுமென்பதை நீங்கள் ஒவ்வொருவரும் அனுபவத்தில் உணர்ந்திருப்பீர்கள். இந்நாட்டில் சில பெரிய நகரங்களில் மட்டும் மேல்நாட்டுப் பாங்குகளும் சீனர் பாங்குகளுமிருக்கின்றன. அவர்கள் நம்மை முன் பின் அறியாதவர்களாதலால் நம்மிடம்பொருள்தர அஞ்சுகின்றனர். ஒன்றுக்கு பத்துப்பெறுமதியுளளசொத்தை அடமானங் கேட்கின்றனர். நம்மவரில் பலருக்கு அவ்வித நிபந்தனையில் பொருள் பெற அவசியமில்லையாயினும், கொடுக்கல் வாங்கல் சௌகரியத்துக்காகக் கடன் வாங்கிக் கணக்கு வைத்துக் கொள்ளுகின்றனர். இதனால் நம்மவர்களுக்கு ஏற்படும் நஷ்டமெவ்வளவென்பதைச் சற்று யோஜியுங்கள். உலகிலுள்ளவர்கள் எல்லோருக்கும் கடன் கொடுக்க வலிமையுள்ள நாம் ஒரு சொற்பத்தொகையைக்கடன்பெறுவதற்காக அயலாரிடம் போய் அவர்கள் செய்யும் பல நிபந்தனைகளுக்கும் உட்பட்டுப்பெறும் நஷ்டத்தையும் அடைய வேண்டிய அவசியமென்ன? நம் பொருளைக்கொண்டு நம்மவர் சௌகரியத்துக்கு அவ்வித பாங்க் ஒன்றை ஏன் நாமே நிறுவுதல் கூடாது? பாங்க் நிறுவுவதற்கு மற்றவரைக் காட்டிலும் பல வழிகளிலும் நமக்குச் சௌகரியமிருக்கின்றன. நம்மிடத்தில் திரண்ட செல்வமிருக்கின்றது. தொட்டிலிலிருந்து பழகிய ரொக்க வியாபாரத்தில்போதிய அனுபவமும் ஆற்றலு மிருக்கின்றன. நடத்தும் திறமைவாய்ந்த பல அறிஞர்கள் நம்மிடையிருக்கின்றனர். தொழிலில் வெற்றிபெற அத்தியாவசியமான தைரியம் நம்மிடத்திலியற்கையாகவே அமைந்திருக்கின்றது. பாங்க் நிறுவுவதற்கு இனி வேண்டியது கூட்டுறவு ஒன்றேயாகும். இக்கூட்டுறவு ஏற்பட்டு விட்டால் நாம் மிக எளிதில் ஒரு பாங்க் அல்ல பல பெரிய பாங்குகளை நிறுவி விடலாம். கூட்டுறவை உண்டுபண்ணவே கூடியிருக்கும் இம் மகாநாட்டில் நாம் முதன் முதலாக இக் கூட்டுறவைப் பெற முயலவேண்டும். ஆதலால் உங்கள் ஒவ்வொருவரையும் இது விஷயத்தில் பெரிதும்முனைந்து விரைவில் ஒரு பாங்கை நிறுவி நம்மவர் வியாபாரத்துக்கு வேண்டிய நலனைச் செய்யுமாறு வேண்டுகிறேன்.

சகோதரர்களே! இன்னும் ஒருமுறை தங்கள் எல்லோருக்கும் முகமலர்ந்த நல்வரவு கூறுகிறேன். இங்கு விசாக விழாவில் இம்மகாநாடு நடைபெறுவதால், உணவு முதலிய வசதிகளைத் தனியாக ஏற்பாடு செய்யவேண்டுவது அவசியமில்லாது போய்விட்டது. ஏனைய சௌகரியங்களும் மிகச்சொற்பமாகவே ஏற்பாடு செய்யப்பட்டிருப்பினும் தாங்கள் அன்புடன் ஏற்றுக் கொள்ளுவீர்களெனப் பெரிதும் நம்புகின்றேன். வரவேற்புக் கழகத்தின் தலைமையை எனக்களித்த வரவேற்புக் கழக அங்கத்தினர்களுக்கு எனது நன்றியைச் செலுத்துகிறேன். இம்மகாநாடு இனிது நிறைவேறும்படி எல்லாம் வல்ல இறைவன் அனுக்கிரஹம் செய்வாராக.

சுபம்.

அதைக் கொண்டு வந்து திணித்து, விவகாரம் பேசி வம்பை வளர்ப்பது விரும்பத்தக்கதல்ல. இந்த விஷயத்தில் நாம் ஆங்கிலேயர்களைப் பின்பற்றி நடந்தால் நலம். அவர்களில் ஒருவர்க்கொருவர் வெளியேயிருக்கும்போது தனித்தனியே மிகப்பகைமை பாராட்டினும், சங்கத்தினூடேயோ கூட்டத்தினூடேயோ சென்ருல் தாம் கொண்ட மனவெப்பத்தை ஆங்கே காட்டிக் கொள்ளார்கள். அதனுலேதான் அவர்கள் திறம்பட எதையும் நடத்தி வருகிருர்கள். இவர் நம் ஜாதியிற் பிறந்தவர்; நம் தேசத்திற் பிறந்தவர்; என்ற அபிமானம்வேண்டும். மனிதன்பேரில் துவேஷமேகூடாது. விஷயத்தைப்பகுத்தறிந்து அதற்குகந்தவாறு செய்ய வேண்டுமேதவிர, தனக்குச் சிறிது விரோத முள்ளவர் சொல்லும் நல்ல காரியங்களையும் எதிர்த்துக்குதர்க்கம்செய்வது சிறப்பாகமாட்டாது. அபிப்பிராய பேத மிருப்பது மனிதர்களுக்கு சகஜம். சிலர் எடுத்ததற்கெல்லாம் என்னுடைய அபிப்பிராய மென்கின்றனர். இதுவும் பொருந்தாததொன்று. தகுந்த காரணமின்றி—அறிவாளிகள் ஒப்புக் கொள்ளாதவைகளைச் சொல்லி வீணே மனதைப் புண்ணாக்கிக் கொள்வது சரியல்ல. எதையும் அன்பு நெறியில் நின்று ஆராய்தல் வேண்டும். காய்தல் உவத்தலின்றிச் சிந்திக்க வேண்டும். முடிவாகத் தோன்றும் மனச்சாட்சிக்கு விரோதமின்றிச் சென்ருல் நலன் விளைவது திண்ணம். நம்மில் யாருக்காவது எங்காவது ஓர் அவமானமோ சிரமமோ நேரிடுமானுல் அதை நமக்கு வந்ததாகக் கருதினுல், எவ்வளவோ முன்னேறி விடுவோம். பண்டைக்காலத்தில் நம்மவர் பிறருக்கு வரும் சுகதுக்கங்களைத் தன்னதாகவே கருதி யிருந்தார்கள். அதனுலேதான் சமூகத்தின் மானம் காப்பாற்றப்பெற்றது. ஒற்றுமையும் நிலவி யிருந்தது. புகழ்ச்சியோ இகழ்ச்சியோ, மதிப்போ அவமதிப்போ, எல்லாவற்றிலும் அனைவர்க்கும் பங்குண்டு. நமக்கென்னவென்றிருப்பது பரோபகார சிந்தையுமாகாது; பெருமையுமில்லை. ஒரு சிலர் எதைச் செய்தாலும் நமக்கென்னவென்றுவாளாவிருந்து, நம் காரியத்தை நாம் பார்த்தால், ஏனைய ஜாதிக்காரர் நம்மை மதிப்பார்களென்று எண்ணுகிறீர்களா? அந்தக் கோஷ்டியில் நம்மையும் சேர்த்து எண்ண முந்துவார்களென்பதைக் கவனிக்கவேண்டுகிறேன்.

நம் தாய்நாட்டிற்குச் சென்றுவரும் கப்பலில் நடைபெறும் விமரிசைகளைச் சிறிது எடுத்து ஆராய்வோம். கப்பலில் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகள் தங்கஅறைகளும், ஸ்நானம்முதலிய செய்யத் தனி இடங்களும், சாப்பாட்டு வசதியும், இக்காலத்திற்கேற்ற வாறுபிற செளகரியங்களும், ஏற்படுத்தி யிருக்கிருர்கள். நம்மவர்கள் இரண்டாவது வகுப்பிலேயே பிரயாணஞ் செய்கிருர்கள். ஆனுல் நமக்கு அறைகிடைப்பது அரிது. அவசரமாக வரவேண்டியதை உத்தேசித்து "சீட்டு" கேட்டால் ஒரு "முகர்" அடித்து கப்பலில் மேற்றட்டிலிருக்கும்படி அனுமதி தருகிருர்கள். இப்படி நாகப்பட்டினத்திலிருந்து கப்பலுக்கு இருபது முப்பதுபேர் வருகிருர்கள். கப்பலுக்கு ஒருவர் இருவருக்குத்தான் "அறை" கிடைக்கும். சாப்பாட்டிற்கு முன்பணம் வாங்கி விடுகிருர்களென்பது உங்கட்குத் தெரியும். ஐரோப்பியர் சாப்பாடு நமக்குப் பிடிக்காது. இந்தியக்கூலிகளுக்கு நாற்றம் பிடித்த அரிசியை அரை அவியலாக அவித்துச் சிறிது உப்பும் உறைப்பும் கூட்டிய ஒருவித ஜலத்தைக் குழம்பென்று ஊற்றிப், போடுகிருர்களே அதைத்தான் சாப்பிட முடியுமா? நாம் கையில் சகலவித சாமான்களும் கொண்டுபோகிறோம். அதை அடுப்பில் வைத்து யெடுத்துத்தா ஆளுக்கு ஒரு ரூபாய் எண்ணித் தராவிட்டால், 'போய்' என்ற அடுப்புவேலைக்காரன் முடியாதென்று விடுகிருன். அங்கு நடக்கும் எல்லாவற்றிற்கும் காசு கொடுக்கா விட்டால் ஒன்றுகூட ஆவதில்லை. இது ஒவ்வொருவரும் அநுபவித்துவரும் கஷ்டம். இதை நிவர்த்திக்க ஒருவர் இருவர் முற்பட்டால் மேலே போகாதவாறு அடக்கிவிட அங்கே ஆட்களிருக்கிருர்கள். நம்மவர்களும் நமக்கென்ன? நாளை நாம் துறைசேர்ந்துவிடுவோம்; ஏன்னத்திற்கு இந்த வம்பு? என்று ஒதுங்கிவிடுகிருர்கள். இதனுலேதான், நம்மவர்களைக் கேவலமாக எண்ண இடமுண்டாகிறது. உண்மையில் நாம் மெத்த நல்லவர்கள்தாம். நம்மாதிரி உலகம் இருக்குமானுல், நமக்குப் பெருமதிப்புக் கிடைக்கும். நம்மை அவமரியாதையாக—புத்தியில்லாத ஒருவனை நடத்துவது போன்று—கொஞ்சச் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தன் நடத்தினுல் தன் மதிப்புக்கு விரோதமானதென்பதைஉணரவேண்டும். இந்தஇடத்தில்நம்மவர் பேரிலும் சிறிதுபிழையுண்டு. தற்காலத்திற்கேற்க ஒழுங்கறிந்து நடந்து கொள்ள வேண்டிய தவசியமல்லவா? கீழ் உத்தியோகஸ்தர்கள் சிறுமைக் குணம் காட்டினுல், மேலதிகாரியிடம் தெரிவிக்க வேண்டியதும் நம்முடைய கடமை என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். நம்மவர் பயந்தவர்களென்று எண்ணி, ஏனையோர் காரியங்களை நடத்துகின்றனர். இந்த இடத்திற்ருன் நம்மானத்தைக் காப்பாற்ற வேண்டும். இதிற் பொறுமை காட்டிய நாள் போதும். நாம் செய்த ஒன்றையே வேறு ஒரு ஜாதிக்காரன் செய்தால், குற்றமாஎண்ணப்படவில்லை. நாம் செய்தால்அவமதித்துத்தூஷிக்கின்ருர்கள். ஏன்? தைரியமின்மையேயாகும்! இத்தகைய சந்தர்ப்பங்கள் நேர்ந்தனான்றுதான், நாம் ஒற்றுமையாகவிருந்துஜயம் பெற முயலவேண்டும். இவை போன்றவைகளிற் பிரவேசிப்பதால் பணச்செலவும் காலவிரயமும், ஆகின்றனவென்று எண்ணவேபடாது. முதலில் சிறிது கஷ்டம் நேர்வதற்கு வருந்துவோமானுல், அதைக்காட்டினும் பெரிதும் வருந்தத்தக்க அவமானம் விளைகிறதென்பதை மறந்துவிடக்கூடாது. கப்பற் கம்பெனிக்காரரிடம் இரண்டொரு விஷயங்களைப்பற்றி நான் ஒரு சமயம் சொன்னேன். "ஓ! அப்படியா!! நீங்கள் இதற்குமுன் சொல்லவில்லையே; நாங்கள் அதிற் கவனமெடுத்துக் கொள்ளுகிருேம்" மென்று சொன்னுர்கள். நாம் சிரத்தைகொண்டு அப்போதைக்கப்போது சொன்னுல் செளகர்யம் ஏற்படும். கப்பலில் ஆசாரமுள்ள தமிழர்களைக்கொண்டு நமக்குச் சாப்பாடு சிற்றுண்டி தயார்செய்து தரும்படி கேட்டுக்கொள்ளலாம். வேலைக்காரர்கள் மரியாதையாக நடந்துகொள்ள வேண்டுமென்பதையும் அதைப்பற்றி உத்தியோகஸ்தர்களுக்குத் தெரிவிக்கும்படியும் நாம் செய்தியனுப்பலாம். இனியேதாவது ஒழுங்கீனமான செயல்கள் நிகழ்ந்தால், நாமும் மௌனமாயிராமல் அதற்கானதைச் செய்கையிற் காட்ட வேண்டுமென்பதை வற்புறுத்துகிறேன்.

பினங்கில் நமக்கொரு நகர விடுதி வேண்டுமென்று பல நாளாகப் பேசப் பெறுகிறது. பினங்கிலுள்ள நகரத்தார் அயலூரிலிருந்து வரும் அன்பர்களை உபசரிக்கும் தன்மையை நோக்கினுல், அதற்கென ஓர் விடுதி வேண்டாமென்றுதான் நான் சொல்வேன். வருகிறவர்களை யெல்லாம் நாம் உபசரிப்போம்; நகர விடுதி வேண்டாமென்று சொல்லுகின்றவர்கள், பினங்கில் இருக்கிருர்களென்பதை நான் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்: அவர்கள் பெருந்தன்மையினுல் அவ்வாறு சொல்லுகிருர்கள். இந்த நோக்கம் பொதுவாக நம்மவர்களுக்கே உரியதென்று சொல்வேன். இருப்பினும் நன்ருக யோசித்துப்பார்த்தால் ஒரு விடுதியிருப்பதுதான் எல்லோருக்கும் சல்லி சென்றுதோன்றுகிறது. ஊர்க்கப்பல் வந்து விட்டால் நிரம்ப மழமழப்பாக விருக்கிறது. எப்பொழுதும் ஏராளமான ஜனங்கள் வந்து கொண்டிருக்கிருர்கள். விருந்தினர்களைத் தேடி அழைத்துவர ஞாபகமாக



வைத்துக் கொள்ளாவிட்டால், சிரமமாகிறது. ஜோலிகள் உள்ளஇடமாகையால்வேலைகளையும் கவனிக்காதிருக்க முடியவில்லை. விருந்தினர்களுக்கும்சில சிரமங்கள் உண்டு. குறித்தநேரத்திற்கு எதையும் செய்ய முடியவில்லை. சதா ஒருவர் வீட்டிற்கா செல்வதென்றெண்ணுகிருர்கள். விடுதியிருப்பின் சல்லி சென்று பொதுவாக அநேகர்பேசுவதை யுன்னியே, இந்த விஷயத்தை நான் இங்கே சொன்னேன். அப்படியானுல் ஒருவீடு வாங்கிச் சில வசதிகள் ஏற்படுத்தினுல் செளகரியமாகவிருக்கும். எல்லோரும் பிரியப்படுகிற படியினுலே முயற்சித்தால் இலகுவில் முடிவுபெறுமென்று நம்பலாம்.

ரப்பர் சம்பந்தமாக என்னென்ன செளகர்யங்கள் தேவையோ அதை யோசித்துக் கேட்டால் இந்த அரசாங்கத்தார் கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

நம்மவர் வியாபார முறையிலும் பயிற்சி பெறவேண்டும். இத்தருணம் செய்துவரும் வட்டித் தொழிலைக் காட்டினும் வியாபாரம் மேன்மையுடையது. அதிக ஊதியமும் கிடைக்கும். ஏனைய ஜாதிக்காரர் வியாபாரம் செய்து ஏராளமான லாபம் அடைகின்றனர். நமக்கு வியாபாரம் செய்யத் தெரியாதென்பதில்லை. அதிற் சிறிதுகாலம் முயன்ருல் மெத்த நேர்த்தியாக நடத்த முடியும். வட்டித் தொழிலை இழிவானதென்று நான் கூறவில்லை. நம்மவர் அனைவரும் ஒரே துறையில் தொழிற்செய்வது யோசனைக்கும் பொருளாதார நிலைக்கும் சரியல்லவென்று அபிப்பிராயப்படுகிறேன். சில வருடங்களாக ஏற்பட்ட ரப்பர் விலை இறக்கம் பொதுவாக நம்மவர்எல்லோரையுமே பாதித்துவிட்டதென்று சொல்லலாம். இப்பொழுது நம்மவர் அநேகருக்கு வியாபாரம் செய்யவேண்டுமென்ற நினைவு உண்டாகியிருக்கிறது. திடீரென்று வட்டித் தொழிலை விட்டுவிட முடியாது. சிறுகச் சிறுக முயன்றுகொண்டேயிருந்தால் வியாபாரத்திலும் தேர்ச்சியடைய ஹேதுவுண்டாகும். நம் நாட்டிலும் எத்தனையோ தொழில்களிருக்கின்றன. நாம் முற்படுவோமானுல் அத்துறைகளெல்லாம் சீருறும். வியாபாரம் நமக்குப் புதிதல்ல வென்பதையும் வைசியர்கட்குத் தர்மென்பதையும் இவ்வமயத்தில் ஞாபக மூட்டுகிறேன்.

நம்நாட்டவர்கள் அனைவரும்சேர்ந்து முதலில் ஒரு "பாங்க்" இவ்விடம் பகுதியில் ஏற்பாடு செய்தல் வேண்டும். இவ்விஷயம் எல்லோருக்கும் திருப்தியானதாகும். சிலவருடங்கள் முன் முற்பட்டிருந்தால் மெத்த சுலபமாக நடத்தியிருக்க முடியும். இச்சமயம் நம் நினைவிற் பதியவைத்துக் காலத்தை நோக்கி யிருப்போமானுல் கைகூடிவிடுமென்று நம்புகிறேன்.

நாம் யோசித்துச் செய்யவேண்டிய வேறு விஷயங்கள் பல இருக்கின்றன. இப்பொழுது சிலகாலமாகத்தான் இத்தகைய முறைகளிற் றலையிட்டு வேலை செய்ய ஆரம்பித்திருக்கிருேம். அதிலும் இந்நாட்டில் இதுதான் முதற்கூட்டம். நம்மவர்க்குப் பெருநலன் விளையத்தக்க விஷயங்கள் அநேகமிருப்பினும், அவைகளைச் செய்ய இன்னும் நமக்குப் போதிய பலம் வேண்டுமென்று நினைக்கிறேன். சிறுதுசிறிதாக நடத்திக்கொண்டு போவதாற் கெடுதல் ஒன்றுமில்லை. இவைகளிற் கவனம்செலுத்த முயன்றுவிட்ட நாம் இனிப் பின்னடையப் போவதில்லை. செய்யவேண்டிய காரியத்தைச்செய்யாதொழிந்தாலும் செய்யவேண்டாததைச் செய்தாலும் பிரயோஜனம் ஏற்படாது. ஆகவே விஷயங்களை நன்காலோசித்து திறம்படச் செய்தல் வேண்டும். முதலில் ஆரவாரமாகச்சேர்ந்து, ஆரம்பித்துவிட்டு, பின்னர்நெகிழவிடுவது சரியல்ல. எதையும் ஆரம்ப சூரத்தனமாகச் செய்யாது ஸ்திரமாகச் செய்தல் வேண்டும். ஒரு விஷயத்தில் ஆய்ந்தோய்ந்து பார்த்துப் பிரவேசிப்போமானுல், பின்னர் எவ்வித இடுக்கண் நேர்ந்த காலத்தும் சோர்வு தோன்ருது. திடமாக முடிவு கட்டிவிட்ட பிறகு அதிற்சந்தேகமிருக்கவே கூடாது. இந்தச் சந்தேகமிருந்தால் ஒன்றுகூட முற்றுப்பெறமாட்டாது. தன்னம்பிக்கையுள்ள இடத்தில் சந்தேகம் நிகழுமோ? நம்பிக்கையில்லா மனிதன் உலகில் வாழ்வது கூட சிரமமாகத்தான் முடியும். நம்பிக்கையாற் பேறுபெற்ற பலரைப்பற்றி நம் சாஸ்திரங்கள் முழங்கிக்கொண்டிருக்கின்றன. ஈஸ்வரனைக் காணவும் நம்பிக்கையில்லாவிட்டால் முடியுமா? அனைத்திற்கும் நம்பிக்கையே பிரதானம். அச்சமென்பதை அறவே அகற்றித்தைரியத்தைக் கைக்கொள்ளவேண்டும். நியாயமாகச் செய்யும் காரியங்களுக்குநாம் பயப்படத் தேவையில்லை. பழி பாவங்களுக்கு நாம் பயப்படத்தான் வேண்டும். பிறதகாச் செயல்களுக்குத் தாட்டிகமாகச் செல்தல்படாது. நன்மையான காரியங்களுக்குப் பின்வாங்காது உழைத்து முன்னேறுவோம்.

இனி உங்கள் அரியகாலத்தைவீணே போக்க எண்ணவில்லை. பின் ஆக வேண்டிய காரியங்களை நடத்த இந்நாட்டிலுள்ள ஒவ்வொரு ஊரிலிருந்தும் பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்து ஒரு கூட்டம் நியமனம் செய்தல் வேண்டும். அவர்கள் இம்மகாநாட்டில் செய்த தீர்மானங்களைக் கண்காணித்துக் கொள்வார்கள். அவசியம் [illegible] அப்பிரதிநிதிகள் எல்லோரும் குறித்த ஒரு ஊரில் கூடிக் காரியங்களை [illegible] லாம். சகல பொறுப்பும் அக்கூட்டத்திற்கு உண்டு. யாருக்காவது எங்காவது தேவையிருந்து தெரிவித்தால் அக்கூட்டத்தார் தக்க நடவடிக்கை எடுத்து செளகரியம் செய்து கொடுப்பார்கள். ஆகவே, இதன் அவசியத்தைக் கருதி அவ்வாறன கூட்டமொன்றை அமைக்குமாறு உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அரும்பண்பார்ந்த அன்பர்களே!

இதுகாறும் என்னுடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தி அமைதியாய்க் கேட்ட உங்களுக்கு எனது நன்றியறிதலைச் செலுத்துகிறேன். இக்கூட்டத்தில் செய்ய வேண்டிய தீர்மானங்கள் பல இருக்கின்றன. அதிற் கருத்தைச் செலுத்துமாறு கோருகிறேன். நம் காரியங்களைத் தொடங்கும் காலத்திலெல்லாம் கடவுளைத் தியானித்துத் தொடங்குவோம். முன்னவனே முன்னின்ருல் முடியாததொன் றுண்டோ? தூய்மையான காரியங்களை [illegible] வைராக்கியத்துடன் செய்ய எழுவோம். நாம் ஒருவரை யொருவர் உண்மையாக நேசிக்கிருேமென்பதைச் செய்கையிற் காட்ட எழுவோம். அடக்கமும் பொறுமையும், சத்தியமும் நம்மிடமிருக்கிறதென்று சொல்லி வெற்றி பெற எழுவோம்!! அன்புருவாய [illegible] டவன் நமக்கு ஆற்றலையும், அன்பையும் ஆனந்தத்தையும் தந்தருளுவாராக!!!

## கம்பநாடர் அறிக்கை.

இதனது, கவிப் பகுதியையும் வசனப் பகுதியையும் தனித்தனி லஞ்சிகைகளாக வெளியிட வேண்டுமென்று பலர் கேட்டுக் கொண்டபடியால், அடுத்த மாதமாகிய மாசி மாதம் முதல் அப்படி வெளியிட உத்தேசித்திருக்கிருேம். இவற்றைத் தனித்தனியே மூன்று மாத லஞ்சிகைகளாக வெளியிடப் போகிருேம். அதாவது கவிப்பகுதியைத் தனி லஞ்சிகையாகவும் வசனப் பகுதியைத் தனி லஞ்சிகையாகவும் வெளியிடுவோம். ஒவ்வொரு லஞ்சிகையும் மூன்று மாதத்துக் கொருமுறை வெளியாகும். ஒவ்வொன்றும் தனித்தனியே வருஷ சந்தா ரூ. க—கஉ—0. ஒவ்வொரு லஞ்சிகையிலும் மாதமொன்றும் (க-பாரம்) ௬அ-பக்கங்கள் வெளியாகும். இவற்றுக்குத் தனித் தனியே சந்தாதாரராகச் சேர விரும்புவோர் சேரலாம். இரண்டுக்கும் சேரவிரும்புவோர்க்கு வருஷ சந்தா ரூ. [illegible] தான்.

காரியஸ்தர் "கம்பநாடர்"

காரைக்குடி.

